அரனென்பவனையும் அம்புயந்தோனையும் ஆழிசங்கு, க
னென்பவனையுங் கைதொழுவேண்டு ஞான் கால்தொழுவார்,
இரவும்பகலு மியலிசைநாடக மென்றுநன்றால் விரவுந்தமிழ்
கடலூர்வாழுங்கள்ளவிநாயகனே. (4)

துதியேனெனினுந் தொழுகேனெனினும் முற்றுண்ட
ர்தமை மதியேனெனினும் வணங்கேனெனினும் வலியவந்து,
கதிபேதரும்வழி காட்டிடுவாய் நின்கருணையினால். விதிமேடபு
ரம் கடலூர்வாழுங் கள்ளவிநாயகனே. (5)

நாகந் துரகம் பலபணியாடை நவநிதிகள் பாகஞ்சுமெ
ன்மொழியாள்போகமும் உன்றன் பாதத்திலே, மோகந்திக
ழப்பணிந்தோர்க்கல்லாமல் முயன்றிடுமோ மேதம்பயில் கட
லூர் வாழுங்கள்ளவிநாயகனே. (6)

இளங்குஞ்சரச்செழுங் கன்றெயெனச்சொலி யேத்திரு
ன்றாய், உளங்கசிந்தங்கையாற் குட்டிக்கொண்டோர்க்குக்கு
றையுமுண்டோ வளங்கொண்டமூவர் தமைமதித்தே தமிழ்
மாலைகொண்டு, விளங்கும் புகழ் கடலூர்வாழுங் கள்ளவிநாய
கனே. (7)

தண்டாயுதத்தையுஞ் சூலாயுதத்தையுந் தாங்கியென்னைக், கண்
டாவிகொள்ள நமனை வரும்வேளையிற் காத்திடுவாய், வண்டா

